உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப்பிரமணே நம:

மண்டலேசுவரரும், பரசமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாசாரியரும்,
நூறு நூல் கிரந்த கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்,)

திருக் களர்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்

மாணுக்கரும்,

திருப் பூவண மட ஸ்தாபகரும் ஆகிய

ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிக ளவர்கள்

இயற்றிய

# ஸ்தோத்திர ரச மஞ்சரி




இது

சிதம்பரம், கோ. சித. மடம்,
ஸ்ரீ சித. நீல கண்ட சுவாமிக ளவர்களால்
பரிசோதிக்கப் பெற்று

மதுரை ராஜேசுவரி பிரசில் பதிப்பிக்கப் பெற்றது.

1949.

சிதம்பரம், கோ. சித. மடம், சங்கத்து, சித. ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றியது.

தேவரு மறையும் வழுத்திடுங் கூடற் றிருத்தல விபூதிநா யகனைப்
பூவண மடத்தி னுறைகண பதியைப் பூவண நாதனைப் பொலிவே
ஓவறத் திகழுஞ் சௌந்தரத் தாயை யுயர்குரு வீரசே கரனைத்
தாவறத் துதித்தான் காசிகா நந்தத் தவமுநி பதிகத்தாற் றழைத்தே.





88

## புனைந் துரை.

மக்கள் மோக்ஷத்தினை அடைவதற்குக், கர்மம் பக்தி ஞானம் என மூன்று மார்க்கங்கள் உள. அவற்றுள், கர்மமும், ஞானமும், எல்லாராலும் அடையக் கூடிய தல்ல. இக் கலியில் பக்தி ஒன்றே எல்லாராலும் சாதாரண மாக அடையத் தக்க தாம். அதுவும், காயிக வாசிக மாநசிகம் என மூ வகைப்படும். அதனுள்ளும், காயிக மாநசிகங்களைப் பார்க்கிலும், வாசிக பக்தியே இக் காலத்திற்குச் சிறந்த தாம். இந்த வாசிக பக்தியையே, மாணிக்க வாசக ஸ்வாமிகள் ஆழ்வார்கள் அருண கிரி நாதர் அபிராமி பட்டர் முதலியோர் செய்திருக்கின்றார்கள். அதனைக் கருதி, திருப் பூவணம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள். மதுரை-பொற் றாமரைக் கரை, விபூதிக் கணபதி பேரிலும், திருப் பூவண மடத்தில் வீற் றிருக்கும், மகா கணபதி பேரிலும், திருப் பூவணம்-திருப் பூவண நாதர் பேரிலும், திருப் பூவணம்—சௌந்தரிய நாயகி அம்மன் பேரிலும், திருக்களர்-ஸ்ரீவீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் பேரிலும், ஐ வகைத் தோத்திரங்கள் செய்திருக்கின்றார்கள். அவற்றில், பக்தி ரசம் நிறைந்திருக்கின்றபடியால், அதற்கு, "ஸ்தோத்திர ரச மஞ்சரி" எனப் பெயர் வைத்து வெளியிடப்படுகின்றது. அன்பர்கள் யாவரும் பார்த்து ஓதி உணர்ந்து இன்புறற்பாற்று. மேற்படி ஸ்ரீகாசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள், பல நூல், சம்ஸ்கிருதம்-ஹிந்தியி லிருந்து மொழி பெயர்த்தும், தமிழ் நூற்கட்கு உரை யியற்றியும் இருக்கின்றார்கள். அவற்றுள், பல அச்சாகி யிருக்கின்றன. பல அச்சாகிக்கொண் டிருக்கின்றன. விரைவில் வெளி வரும்.

உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

## மதுரை பொற் றாமரைக் கரையில் வீற்றிருக்கும்,

# விபூதிக் கண பதி தோத்திரம்.

---

மதுரை வாசி - ஆறு முக ஸ்வாமியின் விருப்பிற் கிணங்கச் செய்தது.

1. சீரே றுலகம னைத்தையும் விளக்கிச் சேர்வுற லின் றியே யவற்றுட், பேரே றுறவமர் சீரிய கணேச பீடில்ஞா லத் தினை யகற்றிச், சூரேறி லேகப்பி ரமமா யிருக்கச் சொல் லும்வி பூதியி னுடனே, நீரேய் மதுரைப்பொற் றாமரைக் கரையி னிகழ்கண பதியைவாழ்த் திடுவாம்.

2. திருவளர் கமலத் தயன்முத லாய தேவராய் முத் தொழி னடத்தி, யிருண்மல மிரிய வியாவரு முன்ற னிணையடி யண்மிய போதே, தருணம தெனவோர்க் தருளிடு நின்றன் றயையினை மநத்தினி லுன்னிப், பொருவரு மதுரைத் தாமரைத் தடத்திற் பூதியார் கணேசநிற் பணிவாம்.

3. சிவனுடைக் குமர! தேசிகத் தலைவன் சிவன்கையின் மாங்கனி கொள்ள, வவனுடைத் தான வவநியைச் சுற்றி யதிவிரைந் தோடியே வருமுன், தவமுடை யுனது யூகபுந் தியினீ தாயையும் பிதாவையுஞ் சுற்றி, னவிலுமக் கனிகொள் தாமரைத் தடத்தி னற்கண பதிநினைத் துதிப்பாம்.

---

1. பேர் ஏறு—புகழ் மிக. சூர் ஏறில்—துன்பம் பொருந்துதல் இல்லாத.



4. வேதநான் கினையும் வேறுவே றாக விரிந்தநல் வியா சராற் செய்த, ஏதமில் லாத பாரத மதனை யிங்குளா ரியாவரு முணர, வோதுறு மொருகோட் டாலதை வரைநின் றுயர்திறன் மநத்தினி லுன்னிச், சீதமார் மதுரைப் பொன்மரைக் கரைவாழ் சிவகண பதிநினைத் துதிப்பாம்.

5. பரவுவார் தமக்குப் பரகதி கொடுக்கப் பாரினிற் றடாகம்வீ திகளில், விரவியே யிருந்து குட்டியே வணக்கம் விருப்பொடு செய்பவர் தங்க, ளூரமுறு பாவவினைகளையொழித்து மொண்டிரு வடியினிற் சேர்க்க, வரமுறு மதுரைப்பொற் றாமரைக் கரையில் வாழ்கண பதிநினைத் தொழுவாம்.

6. செக்கர்போன் றொளிரு முக்கண்மா மலையாத் திகழ்ந்த சிந் தூரநா யகனைத், தக்கவர்க் கருளுந் தன்மையிற் பெரிய தடங்கடற் கருணைநா யகனைய், மிக்கதுட் டரையும் மறக்கரு ணையினால் விரும்பியே யாட்கொளு மிறையாய்ப், பொக்கமில் மதுரைப்பொற் றாமரைக் கரையிற் பொலிகண பதிநினைப் பணிவாம்.

7. சகபதி யருள்பெற் றுயர்குறு முநிவர் தங்கரக் கரக நன் னீரைக், ககபதி விரோதி தாங்குல கொடரிக் கருளநற் காகமாய்க் கவிழ்த்த, நகபதி குனித்தோன் குமரனுஞ் சாமி நாதற்கு மூத்தநல் வேழ, முகபதி யாம்பொற் றாமரைக் கரை வாழ் முதற்கண பதிநினைத் தொழுவாம்.

8. மதுரமா யெவரும் புகழ்ந்துவந் தடைய வருபவர் தங்களை மறித்து, விதுரனென் றுலகோர் துதிப்பதற் குரித்தாய் வினவிடல் போலவீ திகளிற், சதுரம தாக நரவுரு வோடு

தண்கய வுருவினைப் பொருந்தி, மதுரையின் பொற்று மரைத் தடக் கரையில் வாழ்கண பதிநினைப் பணிவாம்.

9. ஒருவரும் வெறுத்த லின்றியே யிருக்கு முலகினைப் பொய்யென வெறுத்துத், திருவருள் பெற்றுச் சிந்தையின் றுயரைத் தீர்த்திட முயல்பவர் தமக்கு, மருவருந் துறவே யுரிய தென் றுணர்த்த வல்லப சத்தியை நீக்கிப், பொருவரும் பொற்று மரைக்கரை வதியும் பூதியார் கணேசநிற் பணிவாம்

10. பவத்தனிப் பரவைக் குரவையை ஞானப் படுவை யைக் கொடுகட்ப் பன்றித், தவத்தனி முயற்சி செய்யினு மதனைத் தாண்டிடல் பிறிதினு லரிதென், சிவத்துயர் மறையின் கருத் தைச்சிறு ஞாசு செவ்வனே யுணர்ந்துய்ய வருள்வான், விவத்தறு மதுரைப்பொற் றுமரைக் கரைவாழ் விபூதியார் கணேசநிற் பணிவாம்.

---

10. விவத்து — ஆபத்து, அல்லது, விபத்து.

---

## திருப் பூவண மடத்தில்,
## சாந்நித்யமாக விளங்கும் மகா கணபதி பதிகம்.

1. சீர்தந்த விதி தோறும்வீற் றருளித் திகழன்ப ரருச் சிக்கப் பெற்று, ஆர்தந்த வினிய மோதக மருந்தி யகமகிழ்க் தடியவர்க் கருள்வான், பார்தந்த கவிகள் புகழ்வகை காவும் பார்ப்பவர் மகிழ்வுற மேவும், நேர்தந்த பூவண மடத்துக் கணபதி நின்மல ரடியிணை தொழுவாம்.

---

1. ஆர் — அழகு. பார் தந்த — உலகத் துள்ள. நேர் தந்த — செவ்வை பொருந்திய.



2. தீவண் மாகு மிறைவனி னுருவ மெனுங்கவி ஞன்றன் துரையைச், சாவண மாகா திருப்பதற் காகச் சார்ந்துபாண் டியவர சாகத், தேவணங் காட்டிச் சிவபத மளித்த சிறப்புறு பொழில்நதி சூழும், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

3. காவல னுக வுறுப்புக டோறுங் காப்புடைக் காவல னுகக், கூவலர் கூவ றமைச்செவிக் கணியாக் கொண்டிடுங் கருணைவா ரிதியாய்க், கேவல மருளிக் கேலமே செய்யுங் கிண் கிணி யொலிகளே கிளம்பப், பூவண மடத்தில்வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

4. தூவண முறுநற் றுமரை யாற்குந் துகளறு மரிபிர மர்க்குந், தேவணி குருவாய்ச் சிருட்டியா தியசெய் திறலினை முறையினி லுதவிக், கோவண மின்றி யாகுவின் மீது குலவிடுங் கோலம துடனே, பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

5. மாவர சாலா தியதருக் களின்கீழ் வயங்கியே வழிச் செலு மவர்க்கும், ஓவுத லின்றி யெளிதினிற் காட்சி யுவப்புட னளித்தருள் செய்து, மேவிடு பத்தர் மோதக மளிக்க விரும்பிய வருளும்வா ரிதியாய்ப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

6. ஆவலஞ் சாலே வீதிமுச் சந்தி யாதிய தலங்களி லுறைந்து, மேவுதா வின்றி யிருக்குநின் பெருமை விளம்பிட

---

4. தூ — வெண்மை, அல்லது, பரிசுத்தம். வணம் — தன்மை. தே அணி — தெய்வத் தன்மை பொருந்திய.

6. தாவு — ஒதுக்கிடம்.

வுரியதோ வெனக்குத், தேவிதே வனுநிற் பணிந்துதற் குற்ற தீர்வினு றறப்பெற வருளிப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

7. கோவமீ தார்ந்த நவமணி குயின்ற கோடிகு ரியவொளி மானக், கைவளை பொருந்திப் பூடண மணிந்து காவல ருருவநன் கமையச், சேவக மாகத் தாவந்த முதல சீவநந் தாவரம் வாழ்ந்து, பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

8. மூவித வுருப்போற் றேற்றினு நினது முதன்மையுற் றெவர்க்குஞ்செப் பரிதாய், வீவுத லின்றிக் கேவல மாக விளங் கிடு முண்மைரு பத்தைப், பாவனை செய்யும் பக்குவர்க் கருளிப் பரமநல் வீட்டின்ப மளிப்பான், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

9. மூவிலை வேலா கியபடை யுடைய முதல்வன்றன் குமரனு மிளைஞன், மாவினி தாய மாங்கனி பெறுவான் மயிலி வர்ந் துலகினைச் சுற்றி, மேவுதன் முன்னர்ப் பிதாவினை மெது வாய் வலம்வந்தம் மிளிர்கனி கவர்ந்து, பூவண மடத்தில் வாழ் கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

10. சாவண மின்றி யின்பமாய் நிலைக்கச் சற்குரு பாதமே போற்றி, கோவண மின்றி நடநநா யகனுய்க் குலவிடுங் கோலமே போற்றி, ஏவமொன் றின்றி யெவர்க்குமே யருள்வா னிலகிடு மருளுரு வாகிப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி போற்றி.

7. கோவம் — பொன். தாவந்தம் — இக்கட்டு, நரகம். சீவநம் — அமுதம், உயிர் வாழ்தல். தாவரம்-இடம், உறுதி.



## திருப் பூவண நாதர் பதிகம்.



1. பொன்வளர் மதுரைப் பாண்டியற் கருள்செய் பொற் றிறன் நினைந்துநைந் துருகி, மன்வள ரன்பால் வழுத்துறு பவர்க்கு மருவுநோய் போக்கிடு மியல்பார், கொன்வளர் பலபூஞ் சோலைகள் சூழ்ந்து கோதற விளங்கிடு மடதலமாம், புன்பிலர் பூவண வைகையின் கரைவாழ் பூவண்ண நாதனைப் பணிவாம்.

2. ஆவல்கொண் டுன்னை வழுத்தியே பணிந்து மாயிழை யார்களை வெறுத்துங், மேவரு ஞாந சாதந மடைந்தும் மேன் மையார் குருபர னருளால், ஏவமில் ஞாந முற்றுநன் மோக்ஷ மெய்திட வெனக்குநீ யருள்வான், பூவண மதனில் வைகை யின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

3. மேவல ரின்றி யினிதுநான் வாழ மேவல ருளமது களிக்கப், பாவக மாக வென்றும்நா னிருக்கப் பாருளோர் விரும் பிட வெவரும், பாவியென் றென்னைப் பகர்ந்திடா திருக்கப் பான்மையெற் கன்புட னளிப்பான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

4. வாவென வழைத்து வைகைநற் கரையின் மடமொன் றை யியற்றுவா யென்று, ஏவல்செய் தனையா லியானுமவ் வாறே யியற்றின னின்னருள் வாக்கால், மேவிநல் லடியா ரவணிருந்

1. பொன்-திறன்—அழகிய தன்மை. மன்-வளர்-நிலை பெற்ற. அல்லது, மிகுதியான. கொன்-அழகு (செல்வம்) புன்மை-சிறுமை, இலர்-இல்லாத.

3. "இருக்க-அப்பான்மை" என்பது, "இருக்கப் பான்மை" என நிலை மொழி யீற் றகரந் தொக்கது.

தர்க்ம விசாரஞ்செய் திடவருள் செய்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

5. சேவக மின்றிப் பாவக மாகச் செல்வமும் வித்தையும் பெற்றுத், தேவனு முன்சிர் நூல்பல வியற்றிச் சேர்ந்தபத் தர்கட்கவை சாற்றி, வீவிலா வுன்றன் சொரூபமே யெய்தி விளங்கிட வெற்குநன் கருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

6. நாவலர் போற்ற நற்றமிழ் மொழியில் நல்லுரை களைச்செவ்வே யாற்றிப், பாவந மாகுந் தேவபா ஷையினுல் பலவற்றைத் தென்மொழிப் படுத்தி, மேவிந்தி நூல்கள் தமிழ் வச நத்து மிளிர்வுறச் செயவெனக் கருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

7. நாவலர் புலவர் பாவல ரவையில் நல்லசொற் பொழிவு செய் திறனை, ஏவரும் புகழ வெனக்கருள் செய்வா னேத்து பொன் னனையினன் மனையின், மேவல்செய் யிரச வாதியாய்த் துலங்கி விக்கிர கத்தினை யளித்துப், பூவண மதனில் வைகை யின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

8. பாவமே லீட்டாற் றீமைசெய் பவர்க்குப் பல்துய ரளித்தவர்த் தடுத்து, மேவநல் வழியுய்த் தின்பருள் நின்றன் மேன்மையா ரறிவரிவ் வுலகில், ஏவர்க்கு மரிதா முயர்முத்தி யெனக்கிங் கெளிதினி லருள்செய வேண்டிப், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

9. கோவறத் தாயில் பன்றிக்குட் டிகட்கு நுவல்கரு ணையிற்றுய்ப் பன்றி, மேவுருக் கொடுபால் நன்களித் தருளி



மிளிர்கரிக் குருவினா ரைகட்கும், ஓவறப் பந்த மொளிருப தேச மோதினை யெனக்குமின் றருள்வாய், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

10. கூவிளந் தளிர்கைக் கொண்டுநற் பூசை நினக்குச் செய் பவர்க்குநற் றுறக்கம், காவிதி யர்போற் கொடுக்குநின் கலந்தை காண்பவ ரெவர்தர ணியிலே, பாவியே னுன்னைப் பணிவது கண்டும் பராமுக மாயிரா தருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

---

## திருப் பூவணம்-சௌந்தரிய நாயகி பதிகம்.

1. பொன்பயில் பதங்கள் வாழ்த்திநின் பத்தர் புரிதரு பதங்கள்முன் பெற்றூர், மன்பயில் வுறுநற் பதங்களை வேண்டி மற்றுனை நினைந்தவ ரடைந்தார், துன்பயில் வில்லா வின்பத் தைக் கொடுத்துத் தூவுயி ரளித்தெனைக் காப்பான், மின்பயில் பூவணச் சௌந்தரி நாயகி விளங்குநின் னடிதிநம் பணிவாம்.

2. பாவந மின்றிச் சீவநஞ் செய்தல் பாழ்நர கடைவிக்கு மென்னுந், தேவனல் வாக்கா மருமறைப் பொருளைத் தெளிய வெற் குணர்த்திநன் னெறியுய்த், தாவியைக் கவருங் கூற்றுரு வண்ண மனையினு மினியைநீ யருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

3. மேவல ரின்றி யியாவரு முறவாய் மிளிரவுந் தக்கநூ லுணர்மே, தாவிக ளோடு சாத்திர மாய்ந்துந் தருவன வுலகி

---

1. பொன் பயில் — அழகு பொருந்திய. மன் பயில் — நிலை பெறுதல் பொருந்திய. தூ — பரிசுத்தம். மின் — ஒளி.

னர்க் குரைத்து, மேவரும் போற்றிப் புகழந்துகொண் டர்ட விருக்குநல் வரமெனக் கருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

4. நாவலர் போற்று நற்கண பதியை நலந்தரு மாறுமா முகனை, ஆவலா யுலகர் வணங்கிநன் குய்ய வருளினு லீந்தனை காழி, மேவுசம் பந்தற் களித்தனு நப்பால் மிளிர்தயை கொண் டெனக் கருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

5. தேவதே வனுநிற் சேர்ந்ததன் மையினுற் றிகழ்சர்வ சத்திமா னுனன், நீவில குறினே வொருசிறி தசைவு நிகழ்த்த வுந் திறனில னுவன், எவர்நின் பெருமை யறிந்துய வல்லா ரெளியனின் னிறையருள் வேண்டிப், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

6. நாவினுல் வருஞ்சொற் குற்றமு மெண்ண நலமற வருமொரு பிழையும், மேவுடல் கொடுசெய் தீவினை யோடு விளங்குபார் வையில்வரு கின்ற, பாவமா தியவா யுளபிழை யனைத்தும் பரிவுடன் பொறுத்தருள் செய்வான், பூவணத் துறை சௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

7. தாவுறு பிரியாப் பிரியங்க ளற்றுத் தருஞ்செய லனைத் துமே யொழிந்து, மேவுறு நினைப்பு மறப்புக ளின்றி விளங்கு நிர்ச் சிந்தனுய்த் தனியே, ஓவற விருந்துன் னுநந்தத் தழுந்த வுளமகிழ்ந் தருள்செய வேண்டிப், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.



8 வீவுதல் வருங்கால் விடயத்தை விழையும் விருப்பினை விடுத்துநன் ருகத், தேவியா முமையே சிந்தைசெய் திருக்கத் தீரவீ ரேசனும் விளங்க, நாவினுல் நானே பிரமமென் றுரைக்க நல்வரந் தந்தருள் புரிவான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

9. கோவுதான் வந்து நுணங்கல்செய் துடலை நுவலுதஞ் செயலறப் பொறிகள், சீவகஞ் செய்த லரிதெனத் திகைத்துச் சிந்தையா குலமுறுந் தருணங், கூவல்செய் தென்னைக் குணநிதிக் கடவுள் கூடவே யிருக்குமா றருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

10. மூவிலை வேலும் மான்மழு வுரியும் முடிதனிற் கங்கை யுந் தரித்த, தேவன துருவிற் பாதியைப் பெற்ற தேவியே யுயிர்விடும் போது, நோவுற வின்றி யசஞ்சல மாக நுவலுநின் னயிக்கிய மருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

---

## திருக்களர்-ஸ்ரீவீர சேகர ஞாந தேசிகர் பதிகம்.

1. சீர்கொண்ட நின்றும மைரமலர்ப் பதத்தைச் சேர்ந்த னர் முன்னம்வந் தநேகர், நார்கொண்டிங் கவர்தம் பதங்களை யெல்லா நன்களித் தின்பம தளித்தாய், கார்கொண்ட வென் னையு மோர்பொரு ளாவெணிக் காத்தருள் செய்திருக் களர் வாழ், பேர்கொண்ட வீர ஞாநதேசிகநின் பிறங்கடி யிணைத்திநம் பணிவாம்.

1. நார் — அன்பு. கார் — அறிவு — மயக்கம்.

2. உளர்விலா வுள்ளத் தமர்ந்திடு முண்மை யுணர்சக்தி யிலெற்குவெம் விடமார், களத்தன்றன் மனைவி கங்கைநன் மதியைக் கழற்றியே துறவியாய் வந்து, கிளர்மிகு வேத வாக்கியப் பொருளைக் கேட்டுய வருள்வடி வதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

3. குளிர்முதற் படைக ளின்றியஞ் ஞாநக் கொடுமையைக் கெடுப்பதற் குவந்த, நளிரினைப் பார்த்தோர் மிகவியந் திடவே நானெனு முடலின்மோ கத்தை, எளிதிலே யொழிய நீக்கிநின் னருளா லேத்துதற் பதமளித் ததிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

4. அளிமலர் விட்டுவிட் டாய்ந்துநன் மதுவுண் டகமகிழ்ந் திருப்பதே போலத், தளமிகு நறுந்தா ரணிந்தமார் புடனே தரணியி லருளொடு வந்து, களிதரு மன்பு கைவரப் பெற்ற கண்டனைக் கடவுள ராக்கிக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

5. வளர்பந்த நீக்க வந்திடு பவர்க்கு வழங்குறு கருணையால் ஞாநங், கிளர்தர மறைமா வாக்கியப் பொருளைக் கிளத்திநன் கன்னவர்க் குரிய, தளைகளைப் போக்கிச் சச்சிதா நந்தத் தன்றனிச் சொரூபமாக் குதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

6. விளர்பரு வத்தான் விவேகமில் லாது விடயத்தில் விடனைப்போற் றிரிந்து, தளர்வினைப் பொருந்திச் சாதநம்

2. உளர்வு இலா — அசை விலா.
3. குளிர் — மழு. நளிர் — பெருமை.



பெற்றுச் சாதுசங் கத்தினைச் சாராக், களவினைச் சார்ந்து கனிவிலென் மநதைக் கனியினுங் கனிவுறத் துதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

7. தளர்வுறும் பருவத் தைம்பொறி களுந்தஞ் சத்தியற் றிருக்கும்போழ் தியானும், உளர்தலில் லாம லுன்னையே நாளுமுளத்தினி னினைக்குமா றருள்வான், பளகறு பத்தர் நின்சர ணடைந்து வேண்டுவ வருள்வதற் குதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

8. பிளவிலா வேதப் பொருளினை யெவர்க்கும் பிழையற விளம்புதல் கருதிக், கொளலரும் பொருளைக் கரதலா மலகக் கனியெனக் கொடுக்கக்கொண் டருளால், தளர்விலா வநுபவாநந்த முற்றவென் றன்மையா ரறிவரிங் குதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்

9. வளமைசெய் வதுபோற் கநவினின் வந்து வழுக்கிலா "நற்கவி புனைக", "அளவிலா நூற்க ளாக்குக" வென்றுன் ஞஞ்ஞையை யெளியனுக் கிட்டாய், களவிலா துன்றண் ணருளினைக் கொண்டு கணக்கில்நூ லியற்றினன் சீரார், களரில்வாழ் வீர ஞாதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

10. களகமூர்ந் தேகுங் கணபதி யென்கோ கலாபியூர்ந் தேகுவோ னென்கோ, இளவந முவண மழவிடை முறையினேறியூர்ந் திடுபவ னென்கோ, களபமா ரம்பிகை யென்னுகோ நினைநேர் காணுமா றருள்புரி வாய்சீர்க், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

6. களவு — வஞ்சகம்.

11\. அளவிலா வன்ப ரன்புடன் வந்து மரற்றியே போற்றிநின் றிறைஞ்சப், பளகறு பத்தர் தமைநல்ல வழியிற் பயிலுமா றருள்தரு மிறையாய்க், கிளர்தரு தெங்கு சாலியே யாதிக் கிளர்பொழில் சோலைசூ ழுதிருக், களர்வளர் வீர ஞாந தேசிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

12\. மாசிலா மணியே கருணைவா ரிதியே மருகிலா வாக் கினாற் றுதிப்பார்க், காசிலா முத்தி யன்புட னளிப்போ யன் பினா னின்றனை யடைந்தேன், றுசிலா தென்னற் சொரூபம தளித்துச் சுத்தமெய்ஞ் ஞாநியாக் குதிருக், காசிலாக் களர்வாழ வீரசே கரனற் கழலிணைக் கருத்தினில் வைப்பாம்.

13\. விளக்கமிலா நாற்காற்போற் றிரிந்த வென்னை
விருப்பியழைத் தருகிருத்தி விநயத் தாலே,
விளக்கமுற மதிகொடுத்துப் போத மூட்டி
விசுத்தபரப் பிரமமதாய்த் துலங்க வைத்து,
உளப்ப லொன்று மில்லாதே யிருக்கச் செய்த
வுன்பெருமை தனைத்திநமு நினைக்கச் செய்வான்,
அளப்பறுசீர் வீரசே கரஞாந தேசிகன்ற
னடியிணைக ளநவரத மநுசந் திப்பாம்.

14\. மாணிக்க வாசகனின் வாசகத்தைத் தான்கேட்ட
வண்செவியே மிசையுலகம் புகுதலைத்தான் கண்டு,
காணிக்கை யாகவே யென்மநதை யுனக்குக்
கடையநா னாணையிட்ட நாண்முதலாய்க் கீழே,
பாணிக்கை யாகவே செலுத்துதலைத் தடுத்துப்
பாழான வென்மநத்தை மேனோக்கச் செய்வாய்,
தோணிக்கை யாகவே நீயிருக்கும் போது
துணைவேறே தனியாக வேண்டுவது மின்றே.

---

விநயம் — உபாயம்.

உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

மண்டலேசுவ்ரரும், பர சமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாச்சாரியாரும்,
நூறு நூல் கிரந்த கர்த்தரும்,

திருக் களர்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்

மாணாக்கரும்,

திருப் பூவண மட ஸ்தாபகரும் ஆகிய

ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிக ளவர்கள்

இயற்றிய

அத்வைத மடாதிபதிகளுக்கும்,
அதிஷ்டாநத்தி லிருப்பவர்கட்கும்,

# ஓர் அறிக்கை.

இது

மதுரை, ராஜேசுவரி அச்சாபீசில்

பதிப்பிக்கப் பெற்றது.

1950.

சாது சங்க [விரோதி தை.] வெளியீடு 1.

உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

ஸ்ரீ சற் குரு நாதன் துணை.

## அத்வைத மடாதிபதிகளுக்கும்,
## அதிஷ்டாந (சமாதி ஸ்தல) த்தி லிருப்பவர்கட்கும்,

# ஓர் அறிக்கை.

**சங்யாச உபநிஷத் - 2-வது அத்தியாயம் 101 மந்திரம்.**

**प्रवृत्ति द्विविधा प्रोक्ता मार्ज्जारी चैव वानरी ।**
**ज्ञानाभ्यासवतमोतुर्वानरी भाक्तमेव च ॥**

பிரவிருத்தி, மார்ஜ்ஜாரமும், வாநரமும், என இரு வகையாகவே கூறப்படும். ஞாந அப்பியாச முடையவனுக்கு பூனையும், பக்தனுக்கே குரங்கும் (உபமாநம்) ஆம்.

**கைவல்ய நவநீதம் - சந்தேகம் தெளிதற் படலம் 2 கவி.**

நற்கருத் துடையோ னாகி ஞானவா னாகி நின்றோன்,
மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரந் தொட்டு,
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன,
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான்.

**பட்டிநத்தார் பாடல்.**

மந்திக்கு ருளையொத் தேனில்லை நாயேன்வ ழக்கறிந் துஞ்,
சிந்திக்குஞ் சிந்தையை யானென்செய் வேனெனைத் தீகற்றிப்,
புந்திப்ப ரிவிற்கு ருளையை யேந்திய பூசையைப்போல்,
எந்தைக்கு ரியவன் காணத்த னேகை லாயத்தனே.



என்று நூல்கள் கூறுகிறபடி, பிரஹ்ம ஞாநி யாகிய குருவை, மாணுக்கர்கள் மர்க்கட (குரங்கு) நியாயம் போன்று - அதாவது - குரங்குக் குட்டியானது, தன் தாயான குரங்கை விடாது வலிந்து கட்டிக் கொண்டு, தாய் சென்ற விடம் எல்லாம் செல்கின்றது போலச் சென்று,

**சாந்த லிங்க ஸ்வாமிகள் வைராக்ய தீபம் 54 கவி.**

யாதியா தொருவ னீங்கியா னேத லதனினு லதனினு
விலனென், றேதலா லனைத்துந் துயர்தரு மெனநீத் துயர்பரம்
பொருளினைக் காட்டுந், தீதிலோர் குரவ னெங்குள னெனவே
தேடுமா லலைகடல் சூழும், பூதல மிசையோர் துறவினே னறவு
பொலிமலர் தேடும்வண் டினைப்போல்.

என்று கூறுகிறபடி, நறவு பொலி மலர் தேடும் வண்டினைப் போலத் தேடி, அடைய வேண்டும் என்றும்,

சிவ ஞாநி யாகிய குரு, மார்ஜ்ஜால (பூனை) நியாயம் போன்று - அதாவது - பூனை தன் குட்டியைத் தானே வலிந்து கவ்விக் கொண்டு போய்க் காப்பாற்றுவது போல, மாணுக்கர்களைத் தேடிச் சென்று, அவர்கள் விருப் பின்றி யிருந்தும், வலிந்து உபதேசித்துக் கைலாசம் வைகுண்டம் பிரஹ்ம லோகம் முதலிய பதவிகளைக் கொடுத்து, அவர்களைப் போகங்களை அநுபவிக்கச் செய்ய வேண்டும் என்றும், நூல்கள் கூறுகிறபடியால், ஆச்சாரியார் இரு வித மாவர்.

அவருள், ஒருவர், அநுபூதிமான் எனப் பெயர் பெற்றுத், தன்னை அடுத்தவருக்குச் சுவதந்திரமாக இருந்து, அநுபவத்தை அருளுபவர் ஆவர்.

வேறு ஒருவர், மதப் பிரசாரகர் - தர்மப் பிரசாரகர் எனப் பெயர் பெற்று, பாதிரிமார்கள் போன்று, பல வூர்கட்கும் சென்று, மாணவர்களைத் தேடிப் பக்குவத்தை உண்டுபண்ணி உபதேசிப்பவர் ஆவர்.

அதனால், ஒரு குரு, ஸ்வதந்திரமாக இருந்து, வந்த பக்குவியை ஸ்வீகாரப் பிள்ளை போன்று கருதித், தன்னுடைய ஸ்வதந்திரத்தையும், ஸ்வரூபத்தையும், கொடுக்கின்றனர்.

வேறு ஒரு குரு, "அவனன்றி யோரணுவு மசையாது" எனக்கொண்டு, பரதந்திரமாக இருந்து, தனக்குள்ள அநுபவத்தைத் தன் மாணவர்கட்குக் கொடுத்து, டிரஸ்டி போலக் கர்த்தவ்யம் உடையவராகச் செய்கின்றார்.

இவ்விதமாக, உலகத்தில் இரு வித வழக்கம் இருக்கின்றது. இவை, அநாதியாகவே அவிச்சிந்ந பரம்பரையாக நடந்து கொண்டிருக்கின்றன. இவைகளைக், குரு பக்திப் பரம்பரை என்றும், சிவ பக்திப் பரம்பரை என்றும், உலகத்தில் இரு விதமாகக் கூறுதல் வழக்கத்தில் இருக்கின்றன.

எறும்பூரில் சமாதியுற்றிலங்கும், அடங்கன் முறை - பாடுதுறை முதலிய நூற்கள் பாடிய, ஸ்ரீ தத்வ ராய ஸ்வாமிகள், ஆளுடையார் (ஆவுடையார்) கோவில் என்னும் ஊரில் ஆத்மநாத ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து, திருவாசகம் - திருக்கோவையார் முதலிய நூற்கள் பாடிய திருவாதவூர் ஸ்ரீமாணிக்கவாசக ஸ்வாமிகள் முதலிய பெரியார்களைக் குரு பக்திப் பரம்பரையார் என்றும், தேவாரம் பாடிய, திரு ஞாந சம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் - ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருவாய் மொழி பாடிய, பன்னிரு ஆழ்வார்கள் முதலிய பெரியோர்களைச் சிவ(கடவுள்) பக்திப் பரம்பரையார் என்றும், அந்த அந்த மரபாரும், உலகத்தில் உள்ள அறிஞர்களும், கூறுகின்றனர்.



அவற்றுள், பிரஹ்ம ஞாநியாகிய குரு பரம்பரையையும், அவற்றைச் சேர்ந்த மடம் என்னும் ஆசிரமங்களையும், அப்பெரியார்களையும், அவர்கட்குள்ள ஸ்வதந்தரங்களையும், அவர்கட்குக் கொடுக்கப்பட்ட பாத காணிக்கைகளையும், யாவரும் உணருமாறு நன்றாக விளக்கிக் கூறுவாம்.

சென்னை ராஜதாநியிலும், அதைச் சேர்ந்த பல ஜில்லாக்களிலும், இங்கிலீஷ் வருஷம் 1800க்கு, அதாவது, இற்றைக்கு 150 வருஷங்களாக, அத்வைத வேதாந்தத்தைக் கைக்கொண்ட பெரியார் பலர் இருந்து வந்தனர். அவர்களின் பெருமைகளை அடியிற் கண்ட செய்யுட்கள் நன்கு விளக்கும்.

பிரஹ்ம கீதை 4-வது அத்தியாயம் 59 கவி

ஈசனும் ஞாநி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதாணந்தத், தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி, மாசிலாப் பரம ஞாநியா முநிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கில், ஆசிலா வரியு மொப்பல னியானு மொப்பல னேவரொப் பாரே.

ஒப்பறும் பரமாத் துவிதஞா நத்தை யுணர்ந்துள பரமயோகிக்குக், கைப்பொரு ளாவி காயமுங் கொடுப்பான் காதலா லவைகொடுத் திடவே, யிப்பவ மறுக்கு ஞாநம்வந் துதித்தற் வேதுவா மதுவிது வொழிய, வுற்பவந் துடைக்கு முணர்வுபெற் றய்தற் கிலதிதி லையுரே லொன்றும். 60.

ஈசுவர கீதை 11-வது அத்தியாயம் 58.

என்னை யேநினைந் தெனைப்பணிந் தெனையருச் சித்தென்,
றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான்,
பின்னியாதுமப் பெருந்தகை யிருந்திடந் தனிலென்,
சென்னி யாற்சுமந் தவற்குவேண் டுவதுசெய் குவனால்.

சசி வந்ந போதம் 109–110 கவி.

தேவரும நித்தருமி வன்றொழில்வி யந்துரைசெ யப்படுவதோ,
மூவரும்வு ணங்கிமுடி யாலவன தேவல்செய முந்துறுவரே.

ஞாநியைந ரன்சுரனெ னத்தொழிக ஞாலமுய நாதனருளால்,
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேதமுடிவே.

ஞால முண்டவன் றலைமிசைச் சுமப்பன்மெய்ஞ் ஞாநி வேண் டுவவெல்லாம், ஆல முண்டவ னவன்பினே திரிகுவ னவனடித் துகட்கன்றே, சில மன்னரும் மற்றுள தேவருந் திசைதிசை பணிந்தேத்தக், காவி ரண்டையுந் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்.

வைராக்ய தீபம் கவி 24.

ஞாநியே யெவரும் வணங்குதற் குரியோ னவினுமா சௌசமல் பெரியோன், மாநிலத் தவன்று னுடல்விடிற் குகைப்பால் வைக்கவென் மறைப்படி புரிதல், தானும்வே தாந்தப் பொருடுணிந் திடினுஞ் சாற்றினில் வாழுமந் தணர்க்கின், றுனதாற் றுறவு பெற்றநற் றவரே யமலவீ டடையுஞா நிகளே.

சமாதி.

பலன்கள் வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத் துவ ஞாநி, நலங்கொ ளுமமாம் மந்திரஞ் செபித்திட நயந்தவ





னீராடும், சலங்கொ ளர்த்தமா மவன்றிரு மேனியே சகலதெய் வமுஞ்செவ்வாய், மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரு மயற்பிணி மருந்தாகும்.

ஒழுக்கமே புரிந்தோ னுத லதனைவிட் டொழிந்தோ னுதல்,
இழுக்கஞ்செய் மூர்க்க னுதல் பண்டித னுத லெண்ணில்,
பழிப்பரு ஞாநந் தன்னின் முயல்பவன் பணியத் தக்கோன்
றொழத்தகு ஞாநி யென்று சொல்லவேண் டுவது முண்டோ.

திரு மந்திரம்—அடியார் பெருமை.

சிவயோகி ஞாநி சென்றவத் தேசம்
அவயோக மின்றி யறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடு நல்லியல் காணும்
பவயோக மின்றிப் பரலோக மாமே. என்ற பெருமை வாய்ந்த அவர்கள், தேக வியோக மான பின், அவர்களை (தேகத்தை)ச் சமாதி வைத் (கநநம் செய்) து, அதன் மேல் கட்டிடம் கட்டி, அதற்குச் சமாதி என்றும், அதிஷ்டாநம் என்றும், கோவில் என்றும், சமாதிக் கோவில் என்றும், ஆலயம் என்றும், எல்லாரும் வழங்குகின்றார்கள்.

அதன் பக்கலில், அந்தச் சமாதிக்குப் பூஜை முதலிய கைங்கரியம் செய்பவர்கள் இருப்பதற்கு, அவர்களாலும், அவர்கள் வழித் தோன்றல்களாலும், கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அவற்றை, ஆசிரமம் என்றும், மடம் என்றும், மடாலயம் என்றும், வழங்கி வருகின்றார்கள்.

இவை இரண்டும், அந்த அந்தப் பெரியார்களுடைய, தபம்-நல் ஒழுக்கம் முதலியவற்றையும், அவர்களின் வழித் தோன்றல்களுடைய, தபம்-நல் ஒழுக்கம் முதலியவற்றையும், நேரில் கண்

கூடாகப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, தாமே இச்சைப்பட்டு, பக்தர்கள் பாத காணிக்கையாகக் கொடுத்த பொருளின் மிகுதியினால் ஏற்பட்டவை யாகும்.

இவை, வேறு ஒருவரால் கட்டப்பட்டு, டிரஸ்டியாகவோ, ஏஜண்டாகவோ, மானேஜ ராகவோ, தர்ம கர்த்தா வாகவோ, ஏற்பாடு செய்து, மதப் பிரசாரம் செய்வதற்கோ, தர்மப் பிரசாரம் செய்வதற்கோ, நிலம் — புலம் — கிராமம் — ஊர் — முதலியன தானம் செய்து கொடுத்துப், பாதந்திர மாக ஏற்பாடு செய்யப் பட்ட, மடம் — ஆலயங்கள் போன்றன அல்ல என்பதை யாவரும் நன்கு உணர வேண்டும்.

இவை, தனிப்பட்ட ஒருவருக்கே உரிமை உடைய பிரைவேட் (Private) என்றும், பலருக்கும் பொதுவான, ரோட் — குளம் — ஏரி — ஆறு — சமுத்திரம் — மலை — மதப் பிரசார மடம் — ஆலயங்கள் போன்றும், ரயில் — கப்பல் — கூட்டுக் கம்பெனிகள் போன்றும், பொது (பப்ளிக்கு Public) அல்ல என்றும், யாவரும் நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

இவற்றிற்குப் பாத காணிக்கையாகக் கொடுத்த பொருள்கள், வக்கீலுக்குக், கேசுக்குப் பீஸ் கொடுத்தது போலும், வைத்திய (டாக்ட Docter) ருக்கு, மருந்து முதலியவற்றிற்குக் கொடுத்தது போலும், ஜோதிஷருக்கு ஜோதிஷம் பார்த்ததற்குக் கொடுத்தது போலும், கோவில் பூஜாரிகளுக்குப், பூஜை செய்ததற்குத் தக்ஷிணை கொடுத்தது போலும், யாஜிப்பவர்கட்கு, இனாம் கொடுத்தது போலும், லாட்டரிச் சீட்டுப் போட்டது போலும், (இவ் அறு வகைத் திருஷ்டாந்தங்கள் போல்) கருதிக், கொடுக்கப் பட்ட பொருள்களே யன்றி, மீண்டும்; வக்கீலிடம் கேஸ் அநுகூல மாகாவிட்டால், கொடுத்த பீசைத் திருப்பிக் கேட்கவும்,



வைத்தியரிடம் வியாதி சௌக்கிய மாகாவிட்டால், மருந்துக்கும், வைத்தியத்திற்கும், கொடுத்த பொருளைத் திருப்பிக் கேட்கவும், ஜோதிஷரிடம், பலன் சரியாக நடக்காவிட்டால், கொடுத்த பொருளைத் திருப்பிக் கேட்கவும், கோவில் பூஜாரிகளிடம், அர்ச்சனை அபிஷேகம் நைவேத்தியம் செய்தும் தன் இஷ்டம் நிறைவேறாவிட்டால், கொடுத்த தக்ஷிணைப் பொருளைத் திருப்பிக் கேட்கவும், யாஜிப்பவர்களிடம், இனாம் கொடுத்த பொருளைத் திருப்பிக்கேட்கவும், லாட்டரிச் சீட்டு அதிர்ஷ்ட மின்மையினால், நமக்குப் போட்ட பணமேனும், அதிகப் பொருளேனும், வராவிட்டால், போட்ட பணத்தை, லாட்டரிச் சீட்டுக் கம்பெனியாரிடம் திருப்பிக் கேட்கவும், உரிமை பாராட்டவும், உரிமையில்லாதது போலத், திருப்பிக் கேட்கவோ, உரிமை கொண்டாடவோ, உரிமை யில்லை என்று எல்லாரும் செவ்விதாக அறிந்து கொள்ள வேண்டும்.

இவ் வாறு, மடங்கள் இரு வித மாகவும், குரு இரு வித மாகவும், இருக்கின்றார்கள் என்னும் வேறுபாட்டினை நன்கு உணர்ந்து, இரு வித மடங்களையும், இரு வித ஆச்சாரியர்களையும், ஒருமைப்பாடாகக் கருதுவோர்களுக்கு விளங்கும்படி எடுத்துக் கூற வேண்டும்.

முஸ்லீம் மதத்தரும், கிருத்தவ மதத்தரும், எவ் வளவு வேறு பாடு உடையவர்களோ, அவ் வளவு வேறு பாடு, பிரஹ்ம ஞான பரம்பரையாரும், சிவ (கடவுள்) ஞான பரம்பரையாரும், உடையவர்கள் என்று, உலக வழக்காலும், நூல் வழக்காலும், தெள்ளிதின் உணர வேண்டும்.

இரண்டும் ஒன்று போல் தோற்றினும், வெள்ளாட்டுக்கும், செம்மறி யாட்டுக்கும், பசுவுக்கும், எருமைக்கும், வித்தியாசம்

இருப்பது போன்று, இரண்டுக்கும் வேற்றுமை, மலைக்கும், கடுகுக்கும், போல இருக்கின்றது என உணர்க.

இவ் வாறு, அத்வைத பரம்பரை மடங்கள், கீழ் காட்டப் படும் நூறு மடங்களும் ஆகும். இவை துறவிகள் சொந்தப் பொருளால் ஏற்பாடு செய்யப்பட்டன ஆகும்.

இதனை அத்வைதிகள் பார்த்துப் பிறருக்கு உள்ள, இரண்டும் ஒன்று என்னும் மயக்கத்தினை, நியாய யுக்திகளைக் கொண்டு போக்குவார்கள் என்று உறுதி கொள்ளுகிறேன்.

திருப் பூவணம்,

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்.

1946.



## மடங்கள்.

| நெ. | ஊர். | இடம். | ஸ்தாபித்தவர் பெயர். |
|---|---|---|---|
| 1 | கோவிலூர் | காரைக்குடி போஸ்டு | முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் மடம் |
| 2 | சிக்கல் | பொருள்வைத்தசேரி | உகந்த லிங்க ஞாந தேசிகர் மடம் |
| 3 | திரு வண்ணு மலை | ஈசாந்ய மடம் | கந்தப்ப ஞாந தேசிகர் மடம் |
| 4 | திரு வண்ணு மலை | பவழக் குன்று மடம் | அழகாநந்த சுவாமி மடம். |
| 5 | சிதம்பரம் | கோ சித மடம் | பொன் னம்பல ஞாந தேசிகர் மடம் |
| 6 | திருக் களர் | கோ. ஆ. மடம் | வீர சேகர ஞாந தேசிகர் மடம் |
| 7 | மதுரை | தெற்கு வெளி வீதி | குட் டைய ஸ்வாமிகள் மடம் |
| 8 | மதுரை | தெற்கு வாசல் | பிரஹ்மாநந்த சுவாமிகள் மடம் |
| 9 | மதுரை | | யோகாநந்த சுவாமி மடம் |
| 10 | மானு மதுரை | | நாராயண சுவாமி மடம் |
| 11 | காளையார் கோவில் | கா. செ. மடம்[ரோட் | செல்லப்ப சுவாமி மடம் |
| 12 | மதுராஸ்-சூளை | பெரம்பூர் பாரக்ஸ் | வீ ர. சுப்பய்ய சுவாமிகள் மடம் |
| 13 | மதுராஸ் | வியாசர் பாடி | சிவப்பிரகாச சுவாமிகள் மடம் |
| 14 | திருப் பூவணம் | வேதாந்த மடம் | காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள் மடம் |
| 15 | திரு வாரூர் | மடப் புரம் | தக்ஷிணு மூர்த்தி சுவாமிகள் மடம் |
| 16 | மழ பாடி | பெரிய மடம் | சுவயம் பிரகாச சுவாமிகள் மடம் |
| 17 | கோவிற் பட்டி | | முக்தாநந்த சுவாமிகள் மடம் |
| 18 | புனல் வாசல் | | இராம லிங்க சுவாமிகள் மடம் |
| 19 | இறம் பூதூர் | | தத்வ ராய சுவாமிகள் மடம் |

| நிர். | ஊர். | இடம். | ஸ்தாபித்தவர் பெயர். |
|---|---|---|---|
| 20 | சாக் கோடை | கோ. ராம. மடம் | வீரப்ப சுவாமிகள் மடம் |
| 21 | வேதாரண்யம் | சாதுக்கள் மடம் | கந்த சுவாமி மடம் |
| 22 | பசு பதி கோவில் | | ஆறு முக சுவாமி மடம் |
| 23 | குடி யேற்றம் | நல் லூர் பேட்டை | வையா புரி சுவாமி மடம் |
| 24 | குடி யேற்றம் | பிச்ச னூர் | வேலுச் சுவாமி மடம் |
| 25 | தஞ்சா வூர் | கரந்தட்டான் குடி | பால் சுவாமி மடம் |
| 26 | தஞ்சா வூர் | கரந்தட்டான் குடி | சங்கர சுவாமி மடம் |
| 27 | வே லூர் | சைதாப் பேட்டை | தோப்பா சுவாமி மடம் |
| 28 | திரு வை யாறு | அறுபத்து மூவர் மடம் | முருகாநந்த சுவாமி மடம் |
| 29 | வல்ல னாடு | | அறிவாநந்த சுவாமி மடம் |
| 30 | பழநி | | பட்டினச் சுவாமி மடம் |
| 31 | பழநி | | சாது சுவாமி ஆசிரமம் |
| 32 | பஞ்ச நதிக் குளம் | | அருணாசல சுவாமி மடம் |
| 33 | செட்டியார் குத்தகை | | மொட் டைய சுவாமி மடம் |
| 34 | ஏகாம்பரக் குப்பம் | | சிவ சுப்பிரமணிய சுவாமி மடம் |
| 35 | குன்றக் குடி | மேல மடம் | நித்யாநந்த சுவாமி மடம் |
| 36 | கோயம் புத்தூர் | பேரை யூர் | சாந்த லிங்க சுவாமிகள் மடம் |
| 37 | காஞ்சி புரம் | | மாத்தூர் சுவாமி மடம் |
| 38 | ஸ்ரீ ரங்கம் | வேதாந்த மடம் | கணேசாநந்த சாமி மடம் |
| 39 | அகிலாண்ட புரம் | | சங்கர சுவாமி மடம் |
| 40 | மழ பாடி | சின்ன மடம் | |



| நிர். | ஊர். | இடம். | ஸ்தாபித்தவர் பெயர். |
|---|---|---|---|
| 41 | திருப் பரங் குன்றம் | | மஹா தேவ சுவாமி மடம் |
| 42 | ராம நாத புரம் | வக சங்கரி அம்மன் கோவில் தெரு | ராமாநந்த சுவாமி மடம் |
| 43 | வாணியம் பாடி | பழைய வூர் | பொன் னம்பல சுவாமி மடம் |
| 44 | ராமேசுவரம் | | சிவாநந்த சுவாமி மடம் |
| 45 | மேட்டுப் பாளையம் | | சபா பதி சாமி மடம் |
| 46 | திருச்சிறுப் பள்ளி | | குன்று மணிச் சாமி மடம் |
| 47 | புதுக் குடி | | சொக்க லிங்க சாமி மடம் |
| 48 | இடைக் காட் டூர் | வேதாந்த மடம் | |
| 49 | நொச்சியம் | மெய்கண்டார் மடம் | சிவப் பிரகாச சாமி மடம் |
| 50 | திரு வாரூர் | | சோம நாதன் கோவில் மடம் |
| 51 | புதுச் சேரி | வேதாநந்த மடம் | வே லாயுத சாமி மடம் |
| 52 | பிள்ளையார் பட்டி | | கோவிந்தாநந்த சாமி மடம் |
| 53 | கார்கூர் | ராமாசிரமம் | சிவ ராஜாநந்த சுவாமி மடம் |
| 54 | காஞ்சி புரம் | | திரி வேணி கிரி சாமி மடம் |
| 55 | இளையான் குடி | | சிவாநந்த சுவாமி மடம் |
| 56 | போளூர் | | விடோபா சுவாமி மடம் |
| 57 | வளவ னூர் | | ஷண்முக சுவாமி மடம் |
| 58 | சலச பாக்கம் | | |
| 59 | பூண்டி | | |
| 60 | பழங் கோவில் | | |

| நிர். | ஊர். | இடம். | ஸ்தாபித்தவர் பெயர். |
|---|---|---|---|
| 61 | பவாநி | | |
| 62 | திருப் புறம்பியம் | | |
| 63 | குச்சன் ஊர் | | |
| 64 | ஆத் தூர் | | |
| 65 | காரியான் ஊர் | தபோ வநம் | நடேச சுவாமி மடம் |
| 66 | பொதட்டூர் பேட்டை | | கிருஷ்ணாநந்த சாமி மடம் |
| 67 | ராம கிருஷ்ணம | ராஜா பேட்டை | கந்த சாமி மடம் |
| 68 | கல்லல் | சாதுக்கள் மடம் | |
| 69 | விருத்தாசலம் | | கணபதி சாமி மடம் |
| 70 | மாந மதுரை | கரிசல் குளம் | ஆறு முக ஸ்வாமி ஆசிரமம் |
| 71 | மதுரை | பசு மலை | விவேகாநந்தா மடம் |
| 72 | சிதம்பரம் | மௌந சாமி மடம் | |
| 73 | உள்ளிக் கோட்டை | | |
| 74 | சேலம் | குகை | |

இவ் வாறு இன்னும் 26 மடங்கள் இருக்கின்றன. அவற்றின் பெயர் நன்றாகத் தெரிய வில்லை. ஆக மடங்கள் 100. நூறு உத்தேசம் ஆகும்.



## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றிய,
## மதுரை, மீநாக்ஷி யம்பிகை பதிகம்.

1. வால்வண்ண ராரும் பாண்டியற் கருளும் வள்ளலாய் வைகைமண் போட்ட, பால்வண்ண ஞருஞ் சொக்கநா தரினற் பாகத்தில் வீற்றிருந் தாட்சி, கோல்கொண்டு செய்யுங் குறிப் பறிந் தடைந்தேன் கொடியனைக் கடைக்கண்பார்த் தருள்வாய், மால்தங்கை யாகி மயக்கறுத் தருளு மதுரைமீ நாட்சியம் பிகையே.

2. ஆவல்செய் தென்ற ளுக்கையுள் ளளவுநின் னடியரன் பினைப்பெறு வதற்குப், பாவியேன் பணிகள் செய்துநின் பெருமைப் பத்தர்கள் பகர்ந்திடக் கேட்டு, நாவினல் வழுத்தி மநத் தினு னினைந்து நாடொறும் புரியுமா றருள்வாய், மாவடுப் போன்ற கண்களை யுடைய மதுரைமீ நாட்சியம் பிகையே.

3. தேனினுங் கசிந்த சொல்லினைப் பெற்றுத் தெங்கங் காய் போற்றந முடையார், மேனிகண் டுழலும் விழிமந மெல்லா மேன்மைபெற் றன்றிரு வடியில், மானினம் போல மயங்கியே யிருக்கும் வரமொன்றை யெனக்குநீ யருள்வாய், மானினம் போன்ற செயல்வழி யுடைய மதுரைமீ நாட்சியம் பிகையே.

4. ஊன்கவ ரன்றி லாதியா முயிர்கட் குவப்புட னருளினை யதனல், ஊனையோம் புதலை விடுத்துனை யடைந்தே னுண்மையை யெனக்குநீ யருளி, ஊநமா முடம்பை யினிப்பெறு திருக்கு முபாயமொன் றெனக்குநீ தருவாய், மாண்மழு சூலப் படையினன் மனைவி மதுரைமீ நாட்சியம் பிகையே.

5. ஆய்தரு புகழார் தில்லையம் பலரா மடிகளை யதுதின மிறைஞ்சி, வாயுறப் புகழ மநமனி நினைக்கும் வரமொன்றை யெனக்குநீ தருவாய், காயொடு கனியுங் கருதியென் னுளங் கனன்றிவண் டிரிதரீஇக் கதித்து, மாயும்ம நிதரை மாயாமல் வைக்கும் மதுரைமீ நாட்சியம் பிகையே.

6. அறம்பொரு ளின்பம் வீடெனு நான்கு மடைவுட னடைவதற் கான, திறம்படு முடம்பைச் செய்தநற் றவத்தாற் சேர்ந்துமே முயல்விலா வென்னைப், புறம்புள வாசைத் தளைகளைப் போக்கிப் போதமுண் டாவதற் கருள்வாய், மறஞ்செயுந் தீய மநிதரைக் காக்கும் மதுரைமீ நாட்சியம் பிகையே.

7. செங்மநற் கருமத் தாலுண்டாந் தன்மை தெரிவதற் கறிவுசற் றேனு, மின்மையில் விலங்கு போற்றிரி கின்ற விரும் பெரு முடலினைப் பெற்றுங், கன்னலி னினிய சொற்களைக் கொண்ட கயல்விழி மாதர்கைக் கொண்ட, மன்மத பாணந் தொலைவதற் கருள்வாய் மதுரைமீ நாட்சியம் பிகையே.

8. குதிரைகொண் டிடவன் றடைந்துட லாதி கொடுத்தவன் போற்கொடுப் பவர்க்கும், இதுவுமொன் றெனத்தம் முடல்பொரு ளாதி யீயுமெம் போலிக டமக்கும், பொதுமையுற் றிவணோர் மானுட னாகிப் பொலிந்தவன் மனைவியாய் விளங்கி, மதுரைமா நகரை யாட்சிசெய் கின்ற மதுரைமீ நாட்சியம் பிகையே.

9. புதுமைதான் றாங்கச் சமணரை வென்று பொலிவுடன் றுலங்குசம் பந்தர், சதுர்மறை யீற்றி னுண்ணிய பொருளைத் தக்கவர்க் கருளொடு கொடுத்தார், இதுநல்ல காலமென்றுனை யடைந்தே னெக்குநீ யின்றருள் செய்வாய், மதுமலர்த் தாம நறவநீர் பாயு மதுரைமீ நாட்சியம் பிகையே.

10. முன்னநான் மறைகள் முழங்கிடும் பொருளாய் முத்திறந் தாபமு நீங்க, மன்னிய யானு மறதியைப் பெற்றே மயலுறு திருக்குமா றருள்வாய், செந்நெலுந் தெங்குங் கதலியுந் திகழத் தென்னவர் தலைவராய்ப் பாண்டி, மன்னர்கள் சூழ வீற்றிருந் தாளு மதுரைமீ நாட்சியம் பிகையே.



---